*Nam nāṭu*

*Malar 5, itaḻ 145*

*November 30, 1957*

Record no. 1131

REGD. No. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE : 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 5] சென்னை : கார்த்திகை 15உ சனி (30—11—57) ★ ★ வெளியூர் : கார்த்திகை 16உ ஞாயிறு (1—12—57) [இதழ் 145

## உலகிலேயே மிகத் துல்லியமான கடிகாரம்!

புதுடில்லி, நவ. 28—

உலகிலேயே மிகத் துல்லியமான கடிகாரத்தை ரஷ்ய விஞ்ஞானக் கழகத்தவர் கண்டுபிடித்திருப்பதாக 'டாஸ்' அறிவித்துள்ளது. ஆண்டு ஒன்றுக்கு அது, ஒரு வினாடியில், கோடியில் ஒருபகுதி நேரம் மட்டுமே தாமதமாகுமாம்.

துல்லியமான கடிகாரம் என்று பெயர் பெற்ற அமெரிக்க சீசியம் கடிகாரத்தைவிட இது மிகவும் துல்லியமானதாம்!

இந்தக் கடிகாரம் எந்தநிலையிலும், மாறுத துல்லியத்துடன் காலம் காட்டக்கூடியதாம்.

# புத்த மதம் தழுவிய தாழ்த்தப்பட்டோர் நிலை?

## சலுகைகள் தரமுடியாது என நிராகரிப்பு

### தனி நபர் தீர்மானம் மக்கள் சபையில் தோல்வி

புதுடில்லி, நவ. 29—

"புத்த மதத்தைத் தழுவிய தாழ்த்தப்பட்ட மக்களுக்கு, இதர தாழ்த்தப்பட்ட மக்களைப்போலவே சலுகைகள் தரவேண்டும்; அதற்காக, தேவைப்பட்டால், அரசியல் சட்டத்தையும் திருத்த வேண்டும்" என்று கோரி, பி. சி. காம்ளே என்பார் கொண்டுவந்த தீர்மானம் ஒன்றினை, மக்கள்சபை இன்று நிராகரித்திருக்கிறது.

'தீர்மானம் கொண்டுவந்தவரின் வாதம், திருப்திகரமாயில்லை' என்று சர்க்கார் தரப்பில் வாதிடப்பட்டிருக்கிறது.

தீர்மானத்தை எதிர்த்துப் பேசிய உள்நாட்டிலாகா உதவி மந்திரி, 'புத்த மதத்தைத் தழுவியவர்களுக்கு சலுகைகள் தந்தால், அது, இஸ்லாம், கிறித்துவ மதத்தைத் தழுவியவர்களிடம் பாரபட்சம் காட்டுவதாக அமையும்' என்று கூறினராம்!

நடைபெற்ற வாக்கெடுப்பில், தீர்மானத்திற்கு எதிராக 47 வாக்குகளும், ஆதரவாக 25 வாக்குகளும் பதிவாகியிருக்கின்றன.

## அமைச்சரின் ஆசை நிறைவேறுமா?

### ஜப்பானிய சாகுபடி முறை அமுலாகுமா?

ஐதராபாத், நவ. 30—

"ஜப்பானிய முறைப்படி சாகுபடி முறையை இந்தியா மேற்கொண்டால், அரிசியில் சுய தேவையை பூர்த்தி செய்து கொள்ள முடியும் என்பதல்லாமல், உபரி அரிசி நாடாகும் நிலையை இந்தியா அடையவும் முடியும்" என்று, சமுதாய அபிவிருத்தி அமைச்சர் எஸ். கே. டே தெரிவித்துள்ளார்.

## பள்ளி இறுதி வகுப்புத் தேர்வு

### பாதிப்பேருக்குமேல் தவறுவதேன்?

#### மக்கள் சபையில் விளக்கம்

புதுடில்லி, நவ. 29—

பள்ளி இறுதி வகுப்புத் தேர்வில், பரீட்சை எழுதும் மாணவரில் சராசரியாக 50 சதவிகிதத்தினர் தவறிவிடுகின்றனராம்!

ஆங்கிலம், கணக்கு இந்த இரு பாடங்களில்தான் தவறுவோர் தொகை அதிகமாம்!

இந்திய சரித்திரம், சுகாதாரம் இவற்றில் தவறுவோரின் எண்ணிக்கை அடுத்ததாம்!

இந்தத் தகவல்களை, இலாகா மந்திரி டாக்டர் ஸ்ரீமாலி, மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

"அளவு கடந்த மாணவர் தொகை, நடைமுறைக்கு ஒவ்வாத பாடத் திட்டம், ஆசிரியர் பற்றாக்குறை, ஆசிரியர்களின் சம்பளக் குறைவு இவைதான் பெரும்பாலான மாணவர்கள் தவறுவதற்குக் காரணமா?"

என்று கேட்டபோது, ஸ்ரீமாலி 'இவையும் இவை போன்ற சிலவும் காரணங்கள்' என்று கூறியிருக்கிறார்.

"அகில இந்திய செகண்டரி கல்விக் குழு அண்மையில், இந்த விவரங்களை ஆராய்ந்தது; அதன் அறிக்கையை முழுவதுமாகப் பரிசீலித்த பிறகு சில சிபாரிசுகள், கல்வி இலாகாவினால், மாநில—மத்திய அரசுகளுக்கு அனுப்பப்படும்" என்றும் அவர் கூறியிருக்கிறார்.

## நேருவுக்கு எதிராக ஆர்ப்பாட்டம்

### 15,000 தொண்டர்கள் அணிவகுத்துள்ளனர்

வெய், நவ. 30—

சிவாஜி சிலையைத் திறந்து வைக்க பண்டித நேரு இங்கிருந்து 30 மைல் தூரத்தில் உள்ள பிரதாப்கர் என்ற இடத்திற்கு நாளை காரில் செல்வார்.

பம்பாய் நகரைத் தலைநகராகக் கொண்டு மகாராஷ்டிரா மாநிலம் தனியே அமையவேண்டும் என்று சமிதியைச் சேர்ந்த 15,000 தொண்டர்கள் மகாபலேஸ்வர் சாலையின் இரு பக்கங்களிலும் அமர்ந்து, பண்டிதரின் வருகைக்குக் காத்துக் கிடக்கின்றனராம்!

தொண்டர்கள் பண்டிதருக்கு எதிராக ஆர்ப்பாட்டம் நடத்துவதைத் தடுப்பதற்காகவே போலீசார், தொண்டர்களை, பிரதாப்கர் என்ற இடத்திற்குச் செல்ல அனுமதிக்கவில்லையாம்!

சாலையோரமாக நின்று ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட பெண்கள் உள்பட 15,000 தொண்டர்கள் கூடியுள்ளனராம்!

தொண்டர்கள் சட்டமன்ற உறுப்பினர் எஸ். எம். ஜோஷி தலைமையில் அணிவகுத்து வந்தனராம்.

தொண்டர்களுக்குத் தேவையான உணவு முதலியன ஏற்ற வந்த உ[illegible] வண்டிகளைப் போலீசார் தடுத்துவிட்டனராம்.

தொண்டர்கள் அமைதியாக இருக்கவேண்டுமென்றும்போலீஸ் உத்தரவுகளை மீறக் கூடாது என்றும், தலைவர் ஜோஷி கேட்டுக்கொண்டதன் பேரில், தொண்டர்கள் சாலையோரமாக அமர்ந்து கொண்டனராம்.

தொண்டர்களுக்குத் தேவையான உணவு முதலியன ஏற்றி வந்துள்ள வண்டிகளை போலீசார் அனுமதிக்க உத்திரவு போட வேண்டும் என்று சமிதியின் தலைவர்கள் அரசாங்கத்திற்கு வேண்டுகோள் விடுத்துள்ளனர்.

## விடுதலைப்போராட்ட தலைவர் தலைக்கு விலை!

### 'ஏற்பாடு திரும்பப்பெறப்படவில்லை' என்கிறார் தத்தார்!

புதுடில்லி, நவ. 29—

நாகர் தலைவர் பிஜோவின் தலையைக் கொண்டுவந்து தருவோருக்கு ரூ. 10,000 பரிசளிக்கப்படும் என்று டெல்லி பறைசாற்றி யிருந்தது அல்லவா?

"இந்த ஏற்பாடு திரும்பப் பெறப்பட்டதா இல்லையா என்பதை இப்போது சொல்வதற்கு இல்லை" என்று உள்நாட்டிலாகா மந்திரி பி. என். தத்தார் மக்கள் சபையில் தெரிவித்தாராம்.

## மதுவிலக்கு அமுலில் முன்னேற்றம் உண்டா?

### குழு நியமனம் பற்றி மாநிலங்கள் கருத்து?

புதுடில்லி, நவ. 30—

மதுவிலக்கு அமுல் முன்னேற்றம் பற்றிய நிலைமையை ஆராய குழு ஒன்றை நியமிக்கவேண்டுமென்று மதுவிலக்கு விசாரணைக் குழு செய்த சிபாரிசுகளை ஏழு மாநிலங்கள் ஏற்றுக்கொண்டுள்ளதாம்; மூன்று மாநிலங்கள் இன்னும் முடிவு தெரிவிக்கவில்லையாம்.

## பல்லாயிரம் ரூபாய் நஷ்டத்தில் நடத்தப்படும் சர்க்கார் ஓட்டல்

### பிரதம சமையற்காரருக்கு ரூ. 1,845 மாதச்சம்பளமாம்!

புதுடில்லி, நவ. 29—

புதுடில்லியில், டில்லி சர்க்கார் நடத்துகிற அசோகா ஓட்டலில் பிரதம சமையற்காரராயிருப்பவருக்கு மாதச் சம்பளமாக ரூ. 1,845 தரப்படுகிறதாம்!

அத்துடன் அவருக்கும் அவரது குடும்பத்தாருக்கும் இலவசமாக உணவு, இருப்பிட வசதிகள் தரப்பட்டிருக்கின்றனவாம்!

சுவிஸ் நாட்டைச் சேர்ந்த இவருக்கு ஆண்டுதோறும் 20,000 சுவிஸ் பிராங்கு சம்பளமாகத் தரப்படுகிறது—அதாவது மாதம் ரூ. 1,845)" என்ற இந்தத் தகவலை மந்திரி அனில் சந்தா மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

இந்த ஓட்டல் பல்லாயிரக் கணக்கான ரூபாய் நஷ்டத்தில் நடைபெற்றுக்கொண்டிருப்பதாகப் பண்டித நேரு, சில நாட்களுக்கு முன்பு தகவல் தந்தது நினைவிருக்கலாம்.

## காலம் கடத்தித் தட்டிக்கழிக்க சதி?

சேலத்தில் இரும்புக் கனிகள் பெருமளவில் கிடைக்குமா என்று தெரிவதற்காக, மத்திய சர்க்கார், நடவடிக்கைகளை மேற்கொண்டிருப்பதாக மக்கள் சபையில் மந்திரி மாளவியா தெரிவித்திருக்கிறார்.

"அங்கு ஏராளமாகக் கனிகள் கிடைக்கும் என்று தெரிந்தால்தான் சர்க்கார் அதனைப் பயன்படுத்த முன்வரும்; இன்றேல், தனிப்பட்டவர்கள், கனியைத் தோண்டி விற்க அனுமதிக்கப்படுவார்கள்" என்றும் அவர் கூறினாராம்!

சேலம்மாவட்டத்தில் கிடைக்கும் 'மாக்னசைட்' என்ற கனிப் பொருளைத் தோண்டி எடுப்பது பற்றி சென்னை சர்க்கார் திட்டம் ஒன்றினை உருவாக்க யோசித்துக்கொண்டிருக்கின்றனர் என்றும் அவர் தெரிவித்தார்!

## 'கேரளத்திற்கு அரிசி செல்வதைத் தடுக்க வேண்டும்'

### டெல்லியிடம் சென்னை சர்க்கார் முறையீடு

புதுடில்லி, நவ. 28—

தஞ்சாவூரிலிருந்து ஏராளமான அரிசி கேரளத்திற்குச் சென்று விடுவதாகவும், இப்படி நடப்பதைத் தடுக்கவேண்டுமென வும் சென்னை சர்க்கார் தங்களிடம் முறையிட்டிருப்பதாக டில்லி உணவு மந்திரி ஜெயின் மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

"ஆனால் இதுபற்றி டெல்லி இன்னும் முடிவேதும் மேற்கொள்ளவில்லை; இந்தப் பிரச்சினையை பலகோணங்களிலிருந்து பார்த்தாக வேண்டும்" என்று கூறியிருக்கிறார்.

உப கேள்விகளுக்குப் பதிலளித்த உதவி மந்திரி தாமஸ், இப்போது அமுலிலிருந்துவரும் மண்டல ஏற்பாடு திருப்திகரமாகவே வேலை செய்வதாகவும், இதனை இப்போது குலைக்கத் தேவையில்லை என்றும் அசோக மேதா குழுவினர் தெரிவித்திருப்பதாகக் கூறினர்.

## 1956-57-ம் ஆண்டில் பற்றுக்குறை நிதி

### ரூ. 238 கோடி என மக்கள் சபையில் தகவல்

புதுடில்லி, நவ. 29—

1956—57-ம் ஆண்டில் மத்திய, மாநில அரசுகளின் நிதிப் பற்றுக்குறை ரூ. 238 கோடி என்று மக்கள்சபையில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

"இந்த ஆண்டில் மொத்தம் பற்றுக்குறை நிதியின் அளவு, இந்த நிதி ஆண்டு இறுதியில் தான் தெரியும்" என்றும் உதவி நிதிமந்திரி பி. ஆர். பகத் தெரிவித்திருக்கிறார்.

# நம் நாடு

தி. மு. க. தின இதழ் — ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்

சென்னை 30—11—57 சனி


## அரிசிக்குப் பதில் கோதுமை!

தென்னக மக்களில் நூற்றுக்கு நூறுபேரும் அரிசியையே மூலஉணவாகக் கொண்டிருப்பவர்களாவர். சோளம், கேழ்வரகு, கம்பு, வரகு போன்ற தானியங்களை மூலஉணவாகக் கொண்டிருப்பவர்கள் சிறுதொகையினரேயாவர். இவர்களுக்கும் அரிசி உணவு கட்டாயத் தேவையாகும்.

அரிசியை மூலஉணவாகக் கொண்டுள்ள பழக்கம் தென்னக மக்களுக்கு இன்று நேற்று ஏற்பட்டதல்ல. தென்னக மக்கள் உழுதுண்டு வாழத் துவங்கிய நாள்முதலே தொடர்ந்து இருந்துவரும் பழக்கமாகும்.

தென்பகுதியில் உள்ள தட்பவெப்பநிலையும் அரிசிச்சோறுண்ணும் பழக்கத்திற்கு ஆக்கம் தருவதாகும். எனவே, அரிசியையே தங்கள் மூலஉணவாகத் தமிழ் மக்கள் கொண்டிருப்பதில் வியப்பொன்றுமில்லை.

தென்னை செழிப்பாக வளரக்கூடிய பகுதிகளில் உள்ள மக்கள் தேங்காய்ப் பாலையும், தேங்காய் எண்ணெயையும் உணவுப் பொருட்களாக ஏற்றுக்கொண்டுள்ளனர். அதுபோன்றே தென்னை மரம் மிகுதியாக இல்லாத நிலப்பரப்பில் உள்ள மக்கள் தேங்காய் எண்ணெயை உணவுப் பொருளாகக் கொள்ளாதிருப்பதும் இயற்கையே.

தென்னக மக்கள் அனைவரும் தென்னகத்தில் விளையக்கூடிய அரிசியையும், சோளம், கேழ்வரகு போன்ற உணவு தானியங்களையும் தங்கள்மூலஉணவுப் பொருளாகக்கொண்டு வாழ்ந்துவருவது பொருத்தமானதேயாகும்.

பலநாள் பழக்கத்தை மாற்றிக்கொள்வது என்பது எவருக்கும் எளிதல்ல. அதிலும், உணவுப் பழக்கத்தை மாற்றிக்கொள்வது என்பது, தென்னக மக்களால் என்றும் முடியாது. தம்தம் உயிரைப் பணயம் வைத்துத்தான் தங்கள் உணவுப் பழக்கத்தைத் தென்னக மக்கள் மாற்றிக்கொள்ள முன்வரவேண்டும்.

மக்கள் அனைவரையும் அவரவர்களுக்குப் பழக்கமான உணவளித்துக் காத்துவர வேண்டியது, ஆளவந்தார்களுக்குள்ள பொறுப்புகள் அனைத்திலும் தலையாய பொறுப்பாகும். இந்தத் தலையாய பொறுப்பையும் நிறைவேற்ற முடியாது என இந்தியப் பேரரசு கைவிரிக்க முன்வந்து இருக்கிறது.

'அரிசி கிடையாது—அரிசிக்குப் பதிலாகக் கோதுமை உண்ணுங்கள்' என்று அபாயச்சங்கு ஊதக்கிளம்பி இருக்கின்றார் உணவு மந்திரி என்ற பெயரில் ஊராண்டுவரும் அஜித் பிரசாத் ஜெயின்.

பர்மாவிலும்விளைச்சல் குறைவாம்—கையிருப்பும் குறைவாம்—எனவே, அங்கிருந்து அரிசியை இறக்குமதி செய்வதற்கில்லை என்று அமைச்சர் அறிவித்திருக்கிறார்.

வேறு சில நாடுகளில் கொஞ்சம் கொஞ்சம் அரிசி இருக்கிறதாம்—இருந்தாலும் அந்த நாடுகளில் இருந்து அரிசியை இறக்குமதி செய்யவேண்டுமானால் அதற்கு வெளிநாட்டு நாணயங்கள் தேவைப்படுகின்றனவாம்--அவை இந்தியப் பேரரசிடம் இல்லையாம்—எனவே, அரிசி இறக்குமதி செய்வதற்கில்லை என்று உணவு அமைச்சர் விளக்கம் தருகிறார்.

உலகத்தில் கோதுமை ஏராளமாக இருக்கிறதாம். அரிசிதான் அரும் பொருளாக இருக்கிறதாம்.

அமெரிக்காவிலிருந்து கோதுமையை இறக்குமதி செய்ய அமெரிக்க நாணயம் தேவை இல்லையாம். அதுபோன்றே, கனடாவிலிருந்து கோதுமையை இறக்குமதி செய்ய அன்னிய நாணயத்திற்கு அவசியமே இல்லையாம். ஆனால் அரிசி இறக்குமதிக்குத்தான் அந்தத் தொல்லையாம்.

இதன் பலனாக, கோதுமையை மூலஉணவாகக் கொண்டிருப்பவர்களுக்கு கோதுமை ஏராளமாக, தாராளமாக வழங்க இந்தியப் பேரரசால் இயலுமாம். அதுபோன்றே, அரிசியை மூல உணவாகக் கொண்டிருப்பவர்களுக்கு அரிசியைக் குறைந்த அளவு வழங்கவும் இந்தியப் பேரரசால் இயலாதாம்.

எனவே, அரிசிக்குப் பதில் கோதுமை! ஏலம் விடுகிறது இந்தியப் பேரரசு, சந்தையில்.

உணவுத் துறையைப் பொறுத்தவரையில் முதல் ஐந்தாண்டுத் திட்டம் முழுத் தோல்வி கண்டுவிட்டது என்பது இதிலிருந்து தெளிவாகிறது.

தென்னக உணவு மண்டல ஏற்பாட்டாலும் எதிர்பார்த்த பலன் ஏற்படவில்லை அல்லது அதனால் தென்னகத்திற்குப் பலன் ஏற்படும்படி இந்தியப் பேரரசு விடவில்லை என்பதும் தெளிவாகிறது.

உணவு' உற்பத்தியில் தன்னிறைவு எய்திவிட்டோம் என இதுவரை இந்தியப் பேரரசால் கூறப்பட்டுவந்தவை அனைத்தும் வெறும் பொய்யுரை என்பதும் தெளிவாகிறது.

அரிசி கிடையாது என அமைச்சர் தீட்டிக்காட்டியுள்ள சித்திரம் அவலட்சணமானதுதான்—பயங்கரமானதுதான்!

அரிசிக்குப் பதில் கோதுமை உண்ணுங்கள் என்ற வள்ளற்றன்மை விண்ணப்பத்தைத் தென்னக மக்களால் ஏற்றுக்கொள்ளுவது இயலாது—நிச்சயமாக இயலாது.

கோதுமை, அரிசியைப் போல் வேகவைத்து உப்பிட்டு உண்ணக்கூடியதன்று.

கோதுமை ரொட்டியாக்கப்பட வேண்டும்—அதற்கு நெய் வேண்டும்—பருப்பும் வேண்டும்.

கோதுமையை அப்படிப் பக்குவம் பண்ணித்தான் தென்னக மக்களால் விழுங்க முடியும்.

இதற்காகும் செலவைத் தென்னக மக்களில் சிலரால்தான் தாங்கிக்கொள்ள முடியும். அனைவராலும் அந்தச் செலவை ஈடுசெய்ய முடியாது.

அரிசிக்குப் பதில் கோதுமை என்று, தென்னக மக்களிடம் ஏலம்போடக் கிளம்பி இருப்பதை உணவு அமைச்சர் உடனடியாக நிறுத்திக்கொள்ள வேண்டும்.

அதற்குப் பதிலாக, கோதுமையைத் தங்களின் மூலஉணவாகக் கொண்டு, எப்பொழுதோ ஒருவேளை அரிசியை உண்ணும் பழக்கத்தைக் கொண்டுள்ள வடநாட்டு மக்களுக்கு அரிசி வழங்குவதைக் கண்டிப்பாக நிறுத்தவேண்டும். அதற்குப் பதில், கோதுமையையே உண்ணவேண்டும் என்று அவர்களுக்கு உபதேசிக்க உணவு அமைச்சர் முன்வரவேண்டும்.

அவ்வகையில் மீதமாகும் அரிசியை, அரிசியையே மூல உணவாகக் கொண்டு வாழ்ந்துவரும் தென்னக மக்களுக்கு அளிக்க உணவு அமைச்சர் திருவுளம் கொள்ளவேண்டும்.

இந்த ஏற்பாட்டின் மூலம்தான் தென்னக மக்களின் அரிசித் தேவையைக் குறைந்த அளவாவது இந்தியப் பேரரசால் ஈடுசெய்யமுடியும். இதைவிடுத்து, அரிசிக்குப் பதில் கோதுமை என, உணவு அமைச்சர் ஏலம்போட முன்வருவதில் நியாயம் துளியுமில்லை.

## வட வியட்நாம் தரும் உதவி

இந்தியாவிற்கு 7,000 டன் அரிசி

புதுடில்லி, நவ. 28—

இந்தியாவிற்கு வட வியட்நாம் மேலும் 7,000 டன் அரிசி தரச் சம்மதித்திருக்கிறது; கடந்த மே திங்களில் இதே அளவு அரிசியை அது தந்தது நினைவிலிருக்கலாம்.

இந்தியாவிற்கு விற்கும் அரிசிக்காகக் கிடைக்கும் பணத்தைக் கொண்டு, இந்தியாவிலேயே, வர்த்தக ஒப்பந்தத்தில் கண்டுள்ள சாமான்களை வாங்கிக்கொள்ளவும் சம்மதித்திருப்பதாகக் கூறப்படுகிறது. இந்தியாவிலிருந்து சணல் பொருள்கள், துணிகள், தோல் முதலியனவற்றை வியட்நாம் வாங்கிக்கொள்ளும்.

## அமெரிக்க அரிசியை சமைக்கும் முறை

அதிகாரி தரும் தகவல்

சென்னை, நவ. 28—

உணவுப் பங்கீடு அமுலில் இருந்த காலத்தில் பிரேசில் அரிசி போன்று இப்போது டி. யு. சி. எஸ். கடைகளில் விற்கப்படும் அமெரிக்க அரிசி, சமைக்கும் போது கூழாகி, பசையாகிவிடுகிறதாம்.

"சமைப்பதற்குமுன் அரிசியை சுமார் 15 நிமிடங்கள் தண்ணீரில் ஊறவைக்கவேண்டும் என்றும், அப்படிச் செய்தால் சாதம் குழைந்துவிடுவதில்லை என்றும் சிவில் சப்ளை அதிகாரி திரு. வெங்கடேசுவரன் அறிவித்துள்ளார்.

## உண்மையாகவா?

புதுடில்லி, நவ. 28—

"தென் அரிசி மண்டலத்தில் அரிசி விலை இப்போது இறங்குமுகமாக உள்ளது"

என்று மக்கள் சபையில் உணவு அமைச்சர் தாமஸ் தெரிவித்துள்ளார்.

## நிலச் சீர்திருத்தம்

பண்டிதர் காணும் உண்மை

புதுடில்லி, நவ. 29—

"நிலச் சீர்திருத்தச் சட்டங்களைச் செய்வது நல்லது; அதில் தாமதம் ஏற்படுவது விவசாயிகளிடையே ஒரு நிலையற்ற மனப்பான்மையை ஏற்படுத்துகிறது" என்று, பண்டித நேரு கூறியுள்ளார்.

## சமுதாய நலத் திட்ட அமைச்சரவை

'ஒழிப்பதற்கு அவசியமில்லை' என்கிறார் நேரு

புதுடில்லி, நவ. 26—

"சமுதாய நலத்திட்ட அமைச்சரவையை ஒழிக்க வேண்டும் என்ற பல்வந்தராய் மேதா குழுவில் உறுப்பினராயிருந்த ஒருவரின் யோசனையை ஏற்பதற்கில்லை"

என்று பண்டிதர் அறிவித்துள்ளார்.

"இந்த மந்திரிசபை தேவையில்லாதது என்று கருதுகின்றனர்; ஆனால் நான் சொல்லுவது, இது அமைந்த பிறகு பல தேவையற்றவை நீக்கப்பட்டிருக்கின்றன; வெகுவான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது" என்றும் பண்டிதர் கூறியுள்ளார்.

## தவறு செய்வதைக் குறைப்பது எங்ஙனம்?

கிருபளானி கூறும் பதில்

புதுடில்லி, நவ. 29—

தவறுகள் செய்வதைக் குறைப்பது எப்படி?

கிருபளானி தமது பள்ளி அனுபவத்தை வைத்து இதற்குப் பதில் தருகிறார், கேளுங்கள்—

"ஒருவர் தமக்குத் தெரியாத விஷயங்களைப் பற்றி அதிகம் பேசக்கூடாது; எவ்வளவு குறைவாகப் பேசுகிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவு தவறுகளும் குறையும்."

இதுதான் ஆச்சாரிய கிருபளானி தரும் பதில்!

அவர் பள்ளியிலிருக்கும்போது பரீட்சைகளில் மிகக் குறைவாகவே எழுதுவாராம்; என்றாலும், அவற்றில் தேர்வுபெற்ற இரகசியம் என்னவெனில், குறைவாக எழுதியதில் தவறுகளும் குறைவாகவே இருக்குமாம்

நிதிமந்திரி டி. டி. கிருஷ்ணமாச்சாரி மக்கள் சபையில், தமது அன்னிய நாட்டுப் பயணம்பற்றி தாக்கல் செய்த அறிக்கை பற்றி விவாதிக்கும்போதுதான் கிருபளானிமேற்கண்டவாறு தெரிவித்திருக்கிறார்.

## உ. பி. உணவு நிலை

பயிர்கள் தீய்ந்துவிட்டனவாம்

இலட்சுமணபுரி, நவ. 28—

மழையில்லாத காரணத்தினால் 50 சதவிகித பயிர்கள் இங்கு தீய்ந்துபோய்விட்டனவாம்!

விளைச்சலில் 5 இலட்சம் டன் குறைந்துவிடும் என்றும் மாநில உணவு அமைச்சர் தெரிவித்துள்ளார்.

இப்போது நேபாளத்திலிருந்து உணவுத் தானியம் ஏற்றுமதி செய்வதற்குத் தடை விதிக்கப்பட்டுள்ளது; இதற்கு முன்னர் 50 000 டன் அரிசி நேபாளத்திலிருந்து வந்துகொண்டிருந்ததாம்!

## வேடிக்கையே வேடிக்கை!

புதுடில்லி நவ 28—

அணு ஆயுத அபாயங்களைச் சமாளிப்பதற்கான சக்தியை மனிதவர்க்கத்துக்குத் தந்தருளும்படி ஆண்டவனை வேண்டிக்கொள்ளும் வகையில் கடந்த செவ்வாய்க்கிழமையன்று இந்து மதத்தைச் சேர்ந்த 500 சந்நியாசிகள் பம்பாயில் தீ மூட்டி தவம் செய்தார்களாம்!

## தேபரின் உபதேசம்?

பாட்னா, நவ. 28—

கிராமப் பஞ்சாயத்துத் தேர்தல்களில் கட்சிகள் பங்கு கொள்வது கூடாது என்றும், அரசியலுக்கு இடமளிக்கக் கூடாது என்றும் காங்கிரஸ் தலைவர் தேபர் கூறியுள்ளார்.

## இரு மொழி பம்பாய் மாநிலம்

'மக்கள்சபையே முடிவை மாற்றலாம்'என்கிறார்நேரு

புதுடில்லி, நவ. 28—

"இரு மொழி பம்பாய் மாநிலம் என்று இப்போதுள்ள ஏற்பாட்டினையே நான் ஏற்றுக்கொள்ளுகிறேன்; ஆனால் எதிர்காலம் பற்றி நான் எப்படிச் சொல்ல முடியும்? அதனை வைத்துக் கொள்வதா இல்லையா என்ற முடிவினைச் செய்ய வேண்டியது மக்கள் சபையே"

என்பதாகப் பண்டித நேரு கூறியிருக்கிறார்.

"நான் பிரதாப்கர் சென்று சிவாஜியின் சிலை திறப்பது, எந்தவித அரசியல் நோக்கத்திற்காகவும் அல்ல"

என்றும் பண்டிதர், பத்திரிகையாளர்களின் கேள்விக்குப் பதிலளிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

"சிலர், நான் 25 ஆண்டுகளுக்குமுன் எழுதிய புத்தகம் ஒன்றில், சிவாஜியைப்பற்றிக் கண்டித்து எழுதியிருப்பதற்காக, நான் அங்கு வரக்கூடாது என்று எதிர்க்கின்றனர்; ஆனால் நானே, அந்தப் புத்தகத்தின் இரண்டாவது வெளியீடு வந்தபோது, முதல் யுத்தத்திற்குமுன் சிவாஜி பற்றிய சில பகுதிகளை நீக்கிவிட்டேன்; காந்தியாரை நாம் வெகுவாக மதிக்கிறோம் என்றாலும், உள்நாட்டிலும் அவரைக் கண்டிப்பவர்கள் கூட இருக்கிறார்கள்; எனவே, இதுபோன்ற சரித்திர சம்பந்தமான விஷயங்களைத் தவறாக அணுகுவது, உண்மையைக் கண்டுபிடிக்க இயலாமல் சரித்திர ஆசிரியர்களுக்குத் தொல்லை தருவதாகும்" என்றும் பண்டிதர் விளக்கியிருக்கிறார்.

## காஷ்மீர் பற்றி பண்டிதர்!

புதுடில்லி, நவ. 28—

"டாக்டர் கிரகாமை நாம் வரவேற்போம்; ஆனால் அவருடனோ, அல்லது வேறு எவருடனுமோ, பல ஆண்டுகளுக்குமுன் துவங்கிய காஷ்மீரில் இருக்கவேண்டியஇராணுவத்தின் அளவு முதலிய பழைய விவகாரங்களைப் பற்றிப் பேச்சுவார்த்தை நடத்துவதற்குத் தயாராக இல்லை" என்பதாக பண்டிதர் கூறியுள்ளார்.

'காஷ்மீரைப் பொறுத்து இந்தியாவின் உடனடி நோக்கம் எல்லாம், காஷ்மீரிலிருந்து பாகிஸ்தான் வெளியேறவேண்டும் என்பதுதான்" என்று பண்டிதர் பகன்றுள்ளார்.

## பால்-அத்தியாவசியப் பொருள் அல்ல!

புதுடில்லி, நவ. 28—

'சாதாரணமாக உடல்நலம் பேண, பால் ஒரு அத்தியாவசியமான பொருள் அல்ல!"

இவ்வாறு கூறிய பண்டிதர், சீன விஞ்ஞானி ஒருவரின் கருத்தை மேற்கோளாகக் காட்டியிருக்கிறார்.

'சீன மக்களின் நோய்த் தடுக்கும் ஆற்றல், அவர்கள் பாலைத் தவிர்ப்பதே" என்று அந்தச் சீன விஞ்ஞானி கூறியிருக்கிறாராம்!

காங்கிரஸ் எம். பி.-க்களிடம் பேசிய அவர், தான் இந்தியாவிலிருக்கும்போது, பொதுவாக பால் குடிப்பதில்லை என்றும், காரணம், இங்கு கிடைக்கும் பால் தரமானதாக இல்லாமலிருப்பதே என்றும் கூறினாராம்!

'ஒரு துணை உணவாகப் பாலை ஏற்றுக்கொள்ளுமாறு மக்களைத் தூண்டவேண்டும்' என்று ஒரு உறுப்பினர் வற்புறுத்தியபோதே, பண்டிதர் மேற்கண்டவாறு கூறினாராம்!



## சென்னை 10-வது வட்ட தி. மு. க. பொதுக்கூட்டம்

க. அன்பழகன், சி. பி. சிற்றரசு கலந்துகொண்டனர்

சென்னை 10-வது வட்ட தி.மு. கழகக் கிளையின் சார்பில் 16—11—57 மாலை, பிடாரியார் கோவில் தெருவில் ஓர் மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. சேலம் சீனிவாசன் இன்னிசைக்குப் பிறகு, கூட்டம் 6-30 மணிக்குத் துவங்கியது.

கூட்டத்திற்குத் தோழர் வீ.சி. தமிழ்தாசன் தலைமை வகித்து, கூட்டத்தின் நோக்கத்தையும், கழக இலட்சியத்தையும் விளக்கி தலைமையுரையாற்றினர்.

அடுத்து, தோழர் அ. இராசகோபால் பேசுகையில், வடநாட்டு ஆதிக்கத்தையும், இந்தித் திணிப்பையும் கண்டித்தார்.

பின், தோழர் சி. பி. சிற்றரசு அவர்கள், நேரு சர்க்காரின் போக்கையும், இந்தியைத் திணிக்க வடநாட்டினர் செய்துவரும் சூழ்ச்சிகளையும் விளக்கி, தமிழ் நாட்டுக்குத் 'தமிழ் நாடு' என்று பெயர் வைக்கமறுக்கும் சென்னை சர்க்காரின் போக்கை வன்மையாகக் கண்டித்து விளக்கவுரையாற்றினர்.

இறுதியாகத் தோழர் க. அன்பழகன் எம்.எல்.ஏ. அவர்கள் நீண்ட கருத்துரை வழங்கினர்.

அவர் பேசுகையில், இந்தி இந்நாட்டில் எந்தெந்த வழிகளில் புகுத்தப்படுகிறது என்பதை விளக்கி, வெள்ளையன் காலத்தில் தமிழும் ஆங்கிலமும் படித்த தமிழ்ப் பிள்ளைகள், வெள்ளையனை விரட்டிவிட்டு சுதந்தரவிழா கொண்டாடுகிறவர்கள் ஆட்சிக்காலத்தில் 3 மொழி கற்க வேண்டியிருக்கிறது என்றும், ஆங்கிலம் ஓர் உலகப் பொது மொழி என்பதுடன், அதைப் படித்தால் அறிவு வளர மார்க்கம் உண்டு என்றும், ஆனால் இந்தியில் எதுவுமில்லை என்றும் விளக்கினர்.

இந்தி எதிர்ப்பு என்பது ஒரு பொதுப் பிரச்சினையாகிவிட்டது என்றும், இந்தியை தி. மு. கழகத்தார்தான் எதிர்க்க வேண்டும் என்பதில்லை என்றும், இந்நாட்டு மக்களனைவரையுமே பாதிக்கக்கூடியது இந்தித் திணிப்பு என்றும், எனவே, அனைவரும் சேர்ந்து இந்தித் திணிப்பை முறியடிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

அவர் தொடர்ந்து பேசுகையில், இந்தித் திணிப்பை இன்றைக்கு யார் யாரெல்லாம் எதிர்க்கிறார்கள் என்பதைச் சுட்டிக்காட்டியும், இந்தி வந்தால் என்னென்ன தீங்குகள் நேரும் என்பதையும், புள்ளி விவரத்துடனும், பல மேற்கோள்களுடனும் அரிய முறையில் விளக்கினர்.

தோழர் அன்பழகன் அவர்களுக்கும், தோழர் சி. பி. சிற்றரசு அவர்களுக்கும் கிளைக் கழகச் சார்பிலும், கன்னையா சைக்கிள் கம்பெனி சார்பிலும், மற்றும் தனிப்பட்டவர்கள் சார்பிலும் கைத்தறித் துண்டுகள் அணிவிக்கப்பட்டன.

தோழர் அன்பழகன் பேசிய பிறகு நன்றி கூறலுக்குப்பின் இரவு 9 மணிக்கு கூட்டம் இனிது முடிவுற்றது.

## நாடியம் தி.மு.க. பொதுக்கூட்டம்

என். வி. நடராசன், சத்தியவாணிமுத்து கலந்துகொண்டனர்

பேராவூரணி அடுத்த நாடியம் தி. மு. கழகச் சார்பில் 19-11-57 அன்று ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. ஆயிரக்கணக்கான விவசாயிகளும், பொதுமக்களும் வந்திருந்தனர். தோழர் வகாப் தலைமைவகித்து கழகக் குறிக்கோளை விளக்கினர்.

அடுத்து தோழியர் சத்தியவாணிமுத்து எம். எல். ஏ. அவர்கள், சட்டமன்றத்தில் தி. மு. கழகம் ஆற்றிவந்துள்ள பணியினை விரிவாக எடுத்துரைத்து, அரசியலாரின் எதேச்சாதிகாரப் போக்கினையும் கண்டித்தார்.

பின்னர் தோழர் என். வி. நடராசன் அவர்கள், தி. மு. கழகம் சட்டமன்றத்திலும், மக்கள் மன்றத்திலும் ஆற்றிவரும் தொண்டினையும், இந்தி ஆதிக்கத்தை எதிர்த்தொழிக்கவேண்டியதன் அவசியத்தையும், வடநாட்டு ஏகாதிபத்தியத்தின் ஓரவஞ்சனைகளையும் விளக்கிப் பேசினர்.

தாழ்த்தப்பட்ட மக்கள் சார்பிலும், கிளைக் கழகங்கள், மன்றங்கள் சார்பில் தலைவர்களுக்குக் கைத்தறித் துண்டுகள் அணிவிக்கப்பட்டன.

தோழர் கிருஷ்ணமூர்த்தி நன்றிகூற கூட்டம் இனிது முடிவுற்றது.

## புத்தாம்பூரில் தி. மு. க. பொதுக்கூட்டம்

சிமெண்டுத் தொழிற்சாலை நிறுவக் கோரிக்கை

15—11—57 மாலை 6 மணியளவில் தோழர் கா. முகம்மதுமீரு தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது; தோழர்கள் அ. வைத்தியலிங்கம், மு. வசனப்பித்தன், முகம்மது மீரு ஆகியோர் திராவிடநாடு பிரிவினையின் அவசியம் குறித்தும், இந்திமொழித் திணிப்பைக் கண்டித்தும், தி. மு. கழகத்தின் சட்டமன்றப் பணி குறித்தும், கழக இலட்சியங்கள் குறித்தும் சொற்பொழிவாற்றினர்.

தி. மு. க. கிளை சார்பிலும், பல மன்றங்கள் சார்பிலும் பேச்சாளர்களுக்கு மலர் மாலைகளும், கைத்தறித்துண்டுகளும் அணிவிக்கப்பட்டன.

கூட்டத்தில் இந்தியை எதிர்த்தும், புதுக்கோட்டையைத் தனி மாவட்டமாக ஆக்கவேண்டுமென்றும், புதுக்கோட்டைப் பகுதியில் சிமெண்டு உற்பத்தித் தொழிற்சாலை ஒன்று நிறுவ வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன,

## இராசகோபாலபுரம் தி. மு. க. துவக்க விழா

என். எஸ். இளங்கோ கலந்துகொண்டார்

17—11—57 மாலை 6 மணியளவில், பிச்சத்தானபட்டி அண்ணா திடலில், கழகத் துவக்கவிழாப் பொதுக்கூட்டம் இராசகோபாலபுரம் தி. மு. கழகச் செயலாளர் பெ. வாசு தலைமையில் நடைபெற்றது; தஞ்சை மாவட்ட தி. மு. க. செயலாளர் என். எஸ். இளங்கோ அவர்கள் கழகத்தைத் துவக்கி கொடியேற்றி வைத்தார். குழந்தைகளுக்கு இனிப்புப் பண்டங்கள் வழங்கப்பட்டன.

பின்னர் தோழர் என். எஸ். இளங்கோ கழகத்தின் இலட்சியம் குறித்து நீண்டதோர் விரிவுரையாற்றினர்; மற்றும் தோழர்கள் ஜெயராம், க. ஞானமுத்து, பொன்னுச்சாமி, பா. செழியன் ஆகியோரும் கழகப் பணிகுறித்துப் பேசினர். தலைவர் முடிவுரைக்குப்பின் தோழர் எஸ். பி. மணியம் நன்றி நவின்றார்.

## அவ்வை இலக்கிய மன்ற ஆண்டுவிழா

என். வி. நடராசன் சத்தியவாணிமுத்து கலந்துகொண்டனர்

திருக்கோயிலூர் வட்டம் எ. கொளத்தூரில் அவ்வை இலக்கிய மன்ற முதலாவது ஆண்டுவிழா 20—11—57 மாலை வள்ளுவர் அரங்கில் நடைபெற்றது. திருக்கோயிலூர் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் எஸ்.ஏ.எம். அண்ணாமலை தலைமை வகித்தார்.

தோழர் கே. என். இராமகிருஷ்ணன் அவர்கள் அவ்வை உருவப் படத்தைத் திறந்து வைத்து அரியதோர் சொற்பொழிவாற்றினர்.

பாவலர் எ.எம். அப்துல்வகாப், 'அவ்வையும்—பகுத்தறிவும்' என்னும் தலைப்பில் விரிவுரையாற்றினர்.

தோழியர் சத்தியவாணிமுத்து எம்.எல்.ஏ., அவர்கள் 'அவ்வையும் இன்றைய தாய்க்குலமும்' என்பதைப் பற்றிச் சொற்பொழிவாற்றினர்.

இறுதியாக தோழர் என். வி. நடராசன் அவர்கள், அவ்வை இலக்கிய மன்றம் ஆற்றவேண்டிய அரும்பணியினையும், சமுதாயத்தில் மலிந்துள்ள புராண கால மூடநம்பிக்கைகளை அகற்றி அறிவுடைமையைப் பரப்ப வேண்டியதின் அவசியத்தையும் விளக்கினர்.

ஆண்டுவிழாத் தலைவருக்கும், சொற்பொழிவாளர்களுக்கும் மன்றச் சார்பில் வாழ்த்திதழ்களும், கைத்தறித் துண்டுகளும் வழங்கப்பட்டன.

தலைவர் முடிவுரைக்குப்பின் செயலாளர் இரா. நாராயணசாமி நன்றிகூற விழா இனிது முடிவுற்றது.

## தூத்துக்குடியில் பொன்னுத்தாய்—முத்துச்சாமி திருமணம்

மறைந்த மாவீரர் கே. வி. கே' சாமி அவர்களின் தமையனாரான கே. வி. தங்கையா அவர்களின் மகள் தோழியர் பொன்னுத்தாய்—தோழர் முத்துசாமி திருமணம் தூத்துக்குடியில், 22—11—57 காலை 10 மணிக்கு வி. வி. டி. நினைவுப் பள்ளி மானேஜர் திரு. சுப்பிரமணியம் தலைமையில் சிறப்புற நடந்தேறியது.

மணமக்களைப் பாராட்டி, தோழர்கள் எம். எஸ். சிவசாமி, நகர தி. மு. க. செயலாளர் எஸ். ஜோசப் ஆகியோர் பேசியபின், தலைமைக் கழகச் சார்பில், துணைப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன் அவர்கள் மணமக்களைப் பாராட்டி ரூ. 700 அன்பளிப்பாக அளித்தார்—தலைமைக் கழகம் ரூ. 100; தோழர்கள் மு. கருணாநிதி ரூ. 100; கண்ணதாசன் ரூ. 100; புரட்சி நடிகர் எம். ஜி. இராமசந்திரன் ரூ. 250; நடிப்பிசைப் புலவர் கே. ஆர். இராமசாமி ரூ. 100; இலட்சிய நடிகர் எஸ் எஸ். இராசேந்திரன் ரூ. 50—ஆக எழுநூறு ரூபாய் தலைமைக் கழகச் சார்பில் அன்பளிப்பு அளிக்கப்பட்டது டன், மற்றும் கிளைக் கழகங்கள், மன்றங்கள் ஆகியவைகளால் வாழ்த்துமடல்களும், அன்பளிப்புகளும் அளிக்கப்பட்டன.

## கிடாரம் ஊராட்சி மன்றத் தேர்தல்

கழகத் தோழர்கள் வெற்றி

5—11—57 அன்று நடந்த கிடாரம் ஊராட்சி மன்றத் தேர்தலில் தி. மு. கழகத் தோழர் ப. பழனியப்பன் ஏகமனதாகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

மற்றும் கழகத் தோழர்கள் மூவரும், கழக ஆதரவாளர்கள் இருவரும் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## சென்னை 47வது வட்ட கழகத் தோழர்கள் மீது தொடரப்பட்ட வழக்கு

ஆதாரமற்றது என நீதிபதி தீர்ப்பு

சென்னை 47-வது வட்டத்தைச் சேர்ந்த எரிக்கரையில் (கோழிப் பண்ணையருகில்) உள்ள நமது தோழர்கள் சடகோபன், கோவிந்தசாமி, எம். தம்பு ஆகியோர் மீது போலீசாரால் 107-வது கிரிமினல் செக்‌ஷன்படி தொடரப்பட்ட வழக்கை விசாரித்த நீதிபதி, வழக்கு ஆதாரமற்றது எனத் தீர்ப்புத் தந்துள்ளார்.

கழகத் தோழர்களுக்காக வழக்கறிஞர் திரு. கொய்லன் வாதாடினார்.

இந்த வழக்கை 47-வது வட்ட கழகக் கிளை ஏற்று நடத்தியது.

## லா. தா. மணக்காலில் தி. மு. கழகக் கூட்டம்

16—11—57-ல், மணக்கால் (லா. தா.) மண்டபத்தின் முன்பு மாபெரும் பொதுக்கூட்டம் தோழர் கோ. மதிமாறன் 'இசை முழக்கத்துக்குப்பின் துவங்கிற்று; தோழர் ம. கி. சோமசுந்தரம் தலைமை தாங்கினர்.

தோழர்கள் இரா. மருதை, பொன்மலை-காமாட்சி, எஸ். நெடுமாறன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்; மக்கள் அமைதியாக இருந்து கொள்கை விளக்கம் கேட்டுச் சென்றனர்.

கூட்டத்தை நடக்கவொட்டாமல் சில காலிகள் செய்த முயற்சி தோல்வியுற்றது.

## சேலம் அம்மாபேட்டை தி.மு.க. பொதுக்கூட்டம்

சேலம் அம்மாப்பேட்டை 23-வது வட்டம் பலபட்டரை மாரியம்மன் கோவில் திடலில் 17—11—57 மாலை 6 மணிக்கு, தோழர் எஸ். காதர்பாட்சா தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது; தோழர்கள் கே. எஸ். மணி, கே. ஆர். மாசிலாமணி, கே. பி. நஞ்சப்பன், எஸ். ஏ. அன்புக்காசு, கே. ஏ வெங்கடாசலம், ஏ. மாரியப்பன் எம்.சி., ஈ. ஆர். கிருஷ்ணன், சிற்றுளி - சுப்பிரமணியம் ஆகியோர் பேசினர்; ஜி. சிவலிங்கம் நன்றி நவின்றார்.

## ஆம்பூரில் தி.மு. கழகப் பொதுக்கூட்டம்

24—11—57 மாலை 6 மணிக்கு, ஆம்பூர் வாரச்சந்தைத் திடலில் தோழர் ஆர். சம்பங்கி எம்.சி. தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது; தோழர் ஏ. கே. வில்வம் தோழியர் அருண்மொழி ஆகியவர்கள் தி மு. கழக நோக்கங்கள் பற்றி மிகவும் தெளிவாகப் பேசினர்; தோழர் எம். பி. சண்முகம் நன்றி நவின்றார்.

### முகவரி மாற்றம்

"கழகத் தோழர்களும், நண்பர்களும், 1—12—57 முதல், அடியில் காணும் முகவரிக்குத் தொடர்புகொள்ள வேண்டுகிறேன்"

என, திருச்சி மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் அ. பெ. தர்மலிங்கம் எழுதுகிறார்.

அன்பில்-தர்மலிங்கம்,
தலைவர், ஊராட்சி மன்றம்
அன்பில் (வழி) லால்குடி

### திருத்தம்

'நம்நாடு' 27—11—57 இதழ் 3-ம் பக்கத்தில் 'சென்னை 16-வது வட்ட தி. மு. கழகப் பொதுக்கூட்டம்' என்கிற தலைப்பிலும் அதன்கீழ் வெளியிடப்பட்டுள்ள செய்தியிலும் '8-வது வட்டம்' என்று இருக்கவேண்டும்' தோழர்கள் அதைத் திருத்தி வாசித்துக் கொள்ளவேண்டுகிறோம். (ஆ-ர்.)

## சென்னை சர்க்கரை ஆலைகளுக்கு உதவி?

ஆராயப்படுமெனத் தகவல்

புதுடில்லி, நவ. 28—

சென்னை மாநிலத்தில் 3 கூட்டுறவு சர்க்கரை ஆலைகள் ஏற்படுத்தப்படுமாம்!

"இந்த ஆலைகளுக்கு அரசாங்கம் உதவி அளிக்குமா?' என்று மக்கள் சபையில் கேட்கப்பட்ட கேள்வி யொன்றுக்கு, ஒதுக்கப்பட்டுள்ள நிதி செலவிடப்படுவதற்கு முன்பு கேட்கப்பட்டால், உதவி அளிப்பது பற்றி ஆராயப்படலாம்' என்று பதிலளிக்கப்பட்டுள்ளது.

## உழைக்கும் பத்திரிகையாளர் சம்பள நிர்ணயம்

டெல்லியின் தீவிரப் பரிசீலனை?

புதுடில்லி, நவ. 26—

உழைக்கும் பத்திரிகையாளர்கள் சம்பள போர்டின் முடிவுகளை 17 பத்திரிகைகள் முழுவதுமாக நிறைவேற்றியிருப்பதாக இப்போது கிடைத்திருக்கும் தகவல்களிலிருந்து தெரிவதாக மக்கள் சபையில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

இந்த முடிவுகளை அமுல் செய்வது மாநில சர்க்கார்களின் பொறுப்பு என்றும், மேற்படி முடிவுகளை நிறைவேற்றுவதற்கு மேலும் என்ன நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று மத்திய சர்க்கார் தீவிரமாகப் பரிசீலனை செய்து வருகிறார்களென்றும் கூறப்பட்டிருக்கிறது.

## சர்க்கார் வெளியிடும் பாடப் புத்தகங்கள்

வெளியிடுபவர்களுக்குத் தகவல்

சென்னை, நவ. 28—

1958—59-ம் ஆண்டு முதல் 1-வது முதல் மூன்றாவது வகுப்பு வரையுள்ள எல்லாப் பாடப் புத்தகங்களையும் அரசாங்கம் வெளியிட முடிவு செய்துள்ளதல்லவா?

இந்த முடிவை சென்னை அரசாங்கம், பாடப் புத்தகங்களை வெளியிடுபவர்களுக்கு அறிவித்துள்ளது.

சென்னை பாடப் புத்தகக் குழு, இந்த மூன்று வகுப்புகளுக்கான புத்தகங்களை வெளியிடுபவர்களிடமிருந்து ஏற்று ஆராயாது.

## பசுவின் சாணத்திலிருந்து வாயுப் பொருள்!

புதுடில்லி, நவ. 25—

இந்திய யூனியன் பகுதியிலுள்ள 11 கிராமங்களில் பசுவின் சாண வாயு உற்பத்தி செய்யும் இயந்திரங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனவாம்!

இந்த இயந்திரங்களில் பசுவின் சாணம் தவிர, தழைகள், வைக்கோல், முதலியவற்றையும் உபயோகிப்பதற்குப் பரிசோதனைகள் செய்யப்பட்டுவருகின்றனவாம்!

பெரிய அளவில் இவைகளை உற்பத்தி செய்வதற்கான பரிசோதனைகளும் நடத்தப்பட்டுவருகின்றனவாம!

இத்தகைய பரிசோதனைகளின் மூலம் இயந்திரங்களின் அமைப்பை இலகுவாக்கவும், அவைகளின் உற்பத்திச் செலவை ரூ. 350 ஆகக் குறைக்கவும் முடிந்ததாம்!

## பஞ்சாயத்துக் கோர்ட்டு உறுப்பினர் தேர்தல்

கழகத் தோழர் வெற்றி

திருப்பூர், நவ. 29—

22—11—57 அன்று, திருப்பூர் டவுன் (தொட்டிய பாளையம் கிராமம்) பஞ்சாயத்து கோர்ட்டு தேர்தல், திருப்பூர் தாலுகா அலுவலகத்தில் தாசில்தார் தலைமையில் நடைபெற்றபோது, பஞ்சாயத்து கோர்ட்டு உறுப்பினராக நம் கழகப் பொதுக் குழு உறுப்பினர் தோழர் சு. துரைசாமி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

# 'கழகத்தைப் பற்றி புரிந்துகொண்டால் எதிர்ப்பவர்களும் நெருங்கி வருவர்'

## 'போலீசுத் துப்பாக்கிக் கண்டு அஞ்சாதவர்கள் அண்ணுவின் ஆணைக்கு அஞ்சிய காட்சி'

**15—11—57** மாலை சென்னை பேத்துநாய்க்கன்பேட்டையில் நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர் மு. கருணநிதி எம்.எல்.ஏ. ஆற்றிய உரையின் பிற்பகுதி இங்கு தரப்படுகிறது ; முற்பகுதி நேற்று வெளியாகியுள்ளது :—

"தி. மு. கழகம் ஆதித்திராவிடர்களுக்கு என்ன சாதித்தது என்று சிலர் கேட்கிருர்கள். 'அரிசனம்' என்ற மயக்குப் பெயரை நீக்கி, 'ஆதித்திராவிடர்' என்ற பெயர் சூட்டியதே திராவிடர் இயக்கம்தான் என்பதை அவர்களுக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன். அவர்களுக்குள்ள—அந்த ஆதித்திராவிடர் என்ற பெயரிலேயுள்ள திராவிடர் என்பதைத்தான் எங்கள் கட்சிக்கும் வைத்திருக்கிறோம்.

"நாங்கள் உங்களுக்கு என்ன செய்யவில்லை? எங்களைத் தவிர உங்களுக்குப் பாடுபட எந்த இயக்கம் இருக்கிறது?—என்று கேட்கிறேன். நாங்கள் திராவிடர் கழகத்தினராக இருந்தபோது தானகட்டும்—சுயமரியாதை இயக்கம், தென்னிந்திய நல உரிமைச் சங்கம் என்ற பெயரிலே இருந்த போது தானகட்டும்-ஆதித்திராவிடர்களுக்காக உண்மையில் பாடுபட்டவர்கள் நாங்கள்தான்—திராவிடரியக்கம்தான்! சில காங்கிரஸ்காரர்கள் பேசலாம்—தாங்கள்தான் ஏதோ சாதித்துவிட்டதாக!

"நங்கவரம் போராட்டத்தில் ஈடுபட்டது யார்? அதனல் பலனடைந்தவர் யார்? நங்கவரம் விவசாயிகளில் 100-க்கு 100 பேர் ஆதித்திராவிடர்கள்தான். அவர்கள்தான் பலனடைந்தனர். வேறு, நாயக்கரோ, படையாச்சியோ அங்கு விவசாயிகளாக இல்லை.

"மந்திரி பக்தவத்சலத்தை கல்லணையில் கண்டேன்; குளித்தலையில் கண்டேன்; சட்டசபையிலும் பலமுறை எடுத்துச் சொன்னேன்; நங்கவரம் விவசாயிகளின் துயரை எடுத்துச் சொல்லி, அதைப் போக்க வழி செய்ய வேண்டுமென்று கேட்டேன்; 'நங்கவரத்துக்கு வாரீர், வாரீர்' என அமைச்சரை அழைத்தேன்; அதற்கு அமைச்சர், 'நான் என்ன செய்யட்டும்? சட்டத்தில் ஓட்டையிருந்ததால் உயர் நீதிமன்றத்திலே வழக்குப் போட்டிருக்கிருர்கள்; முடிந்தால், நீயே போய்ப் பார்; சமரசத்துக்கு ஏற்பாடு செய்' என்று கூறிவிட்டார். அதன் பிறகுதான், நான் அண்ணுவின் அரிய யோசனைகளைக் கேட்டு, தி. மு. கழகத்தின் துணையோடும், ஆதரவோடும் போராட்டத்தைத் துவக்கினேன்.

"அங்கு நாங்கள் யாரை எதிர்த்தோம் தெரியுமா? நாங்களும், பிராமணர்களும் கட்டிப் புரள்வதாக திராவிடர் கழகத்தவர் சொல்லுகிருர்கள்; உண்மையிலேயே நாங்கள் பிராமணர்களோடுதான் கட்டிப் புரண்டோம் என்ருல், சாதாரணமாக அல்ல; மல் யுத்தத்திலேதான் இரண்டு பேரும் கட்டிப் புரண்டோம். ஆரியர்களே நிறைந்த பெரிய பண்ணை நங்கவரம் பண்ணை; அந்த நங்கவரம் பண்ணையும் சாதாரணமாகக் கொஞ்ச நிலமுடையதல்ல—'நாடு பாதி, நங்கவரம் பாதி' என்று சாதாரணமாகப் பழமொழி சொல்லுவார்கள். அந்தப் பழமொழிக்கே இலக்கான பண்ணை அது; அந்தப் பண்ணையாரை எதிர்த்துதான் தி. மு. கழகம் அங்கே போர்க்கொடி உயர்த்தியது. ஆனல், நாங்கள் விவசாயிகளினுடைய எலும்பைப் பொடி பண்ணி அதைக் கழக வளர்ச்சிக்கு உரமாக உபயோகப்படுத்தவில்லை.

"நங்கவரத்தில் போராட்டம் நடந்துகொண்டிருந்த சமயம், நான் ஒரு நாள் அவசரமாக சென்னை வர நேர்ந்தது. அன்றைய தினம் போலீசார் கொஞ்சம் அதிகப்படியாக நடந்துகொண்டிருக்கிருர்கள் ; உடனே 100 விவசாயிகள் வயலில் இறங்கி சிறிது கட்டுப்பாடு குறைந்து நடந்து கொண்டிருக்கிருர்கள். 'போலீஸ் துப்பாக்கி எங்களை என்ன செய்யும்—பார்க்கிறோம், ஒரு கை ; சுட்டால் சுடட்டும்; துப்பாக்கி பெரிதா—கலப்பை பெரிதா என்பதைப் பார்ப்போம்' என்று கூறி, கலப்பையைத் தூக்கிக்கொண்டு கிளம்பிவிட்டார்கள். அதைக் கண்டு போலீஸ் அதிகாரிகள் என்ன செய்தார்கள் தெரியுமா? துப்பாக்கியால் சுடவில்லை; கொதித்தெழுந்தவர்களைப் பார்த்து, அந்தப் போலீஸ் அதிகாரிகள், ஒரு பெரிய 'சூரண'த்தைக் கொடுத்தார்கள்; 'உங்கள் அண்ணு உங்களுக்கு என்ன சொல்லியிருக்கிருர் என்பதை மறந்துவிட்டீர்களா? அன்று குளித்தலை பொதுக்கூட்டத்தில் உங்களுக்கு அழகாக எடுத்துச் சொன்னுரே-கட்டுப்பாடு குலையாமல், கண்ணியம் தவருமல் நடக்க வேண்டுமென்று ! அமைதியாகப் போகிறீர்களா, அல்லது அண்ணுவுக்குத் தந்தி கொடுக்கட்டுமா? — என்று கூறி, விவசாயிகளை மிரட்டியிருக்கிருர்கள்.

"'அண்ணு' என்ற சொல்லைக் கேட்ட உடனே விவசாயிகளும், 'அண்ணு சொல்லை மீறக்கூடாது' என்ற உணர்வு வந்தவர்களாய், அண்ணுவுக்குப் பயந்து அமைதியாகக் கலைந்து சென்றிருக்கிருர்கள் ; போலீஸ் துப்பாக்கிக்கும் பயப்படாத அவர்கள், அண்ணு ஆணைக்குப் பயந்தார்கள்.

"அப்படி ஒரு தாரக மந்திரமாக—அண்ணு சொன்னுர் என்ருல் கட்டுப்படுவார்கள் என்றுதான் — அண்ணு பெயரை அவர்கள் சொல்லியிருக்கிருர்கள். போலீஸ் அதிகாரிகளே 'அண்ணு'வைக் காட்டித்தான் மிரட்டவேண்டியிருந்தது என்ருல் அந்தச் சொல்லுக்கிருந்த சக்தி எவ்வளவு?

"சட்டசபையிலே சுப்பிரமணியம் சொன்னுர்—'தி. மு. கழகத்தினர் பேச்சைக் கேட்டு நாங்கள் எல்லோருமே மயங்கிவிடமாட்டோம், மெய்யை உருக்கினுல் கடைசியில் சில குருணைகளும் அதில் தங்கும்'—என்று கூறினர். அந்தக் குருணையையும் உருக்க வேண்டுமானல் நெருப்பையே அதில் போட்டாவது பார்க்க வேண்டும்.

"ஒருநாள்—சட்டசபை விவாதத்தின்போது—இலக்கியத்தைப் பற்றி ஒரு சந்தேகம் வந்தது; அப்பொழுது அமைச்சர் சுப்பிரமணியம் சொன்னுர் — 'நமது அண்ணுவைக் கேட்டால் தெரியும் — என்ருர் ; 'ரோமபுரி ராணிகள்'தான் இந்த அண்ணுதுரைக்கு எழுதத் தெரியும்—என்று, எந்த சுப்பிரமணியம் முன்பு கிண்டல் செய்தாரோ, அதே சுப்பிரமணியம்தான் — 'இலக்கியம் படித்த 'நமது அண்ணு' இருக்கிருர்; அவரைக் கேட்டால் தெரியும்'—என்ருர். 'அண்ணுதுரை என்று கூடச் சொல்லவில்லை ; 'நமது அண்ணு' என்ருர்.

"முன்பெல்லாம், எங்கோ, நாம் மேடைகளிலே பேசுவதை அவர் பத்திரிகைகளிலே படித்துவிட்டு நம்மைப் பற்றிப் பேசினர்; இப்பொழுது, அவர் எதிரிலேயே நாம் இருந்து பேசுவதால் நம்மை அவர் நன்ருகப் புரிந்துகொண்டு பேசுகிருர். இதுதான், அவர், முன்பு அப்படிப் பேசியதற்கும், இப்பொழுது இப்படிப் பேசுவதற்கும் காரணம். யாருமே நம்மை நன்ருகப் புரிந்துகொண்டால் பிறகு நெருங்கிவருவது எளிது.

"தி. மு. கழகத்தைப் புரிந்துகொள்ளாதவர்கள்தான் அதை எதிர்க்கிருர்கள்; புரிந்துகொள்ள ஆரம்பித்தால் பின்னர் நெருங்கிவர ஆரம்பிப்பார்கள்."

## மேயர் தேர்தல்

### காங்கிரஸ் அபேட்சகர் தேர்வில் லஞ்சமா?

காங்கிரஸ் மற்ருெரு கோஷ்டி வெளியிட்ட தகவல்

சென்னை நகரசபை மேயர் தேர்தலுக்கு காங்கிரஸ் அபேட்சகராக நிற்க போட்டியிட்ட திருமதி தாரா-செரியன், டாக்டர் சந்தோஷம் ஆகிய இருவரில் தாரா-செரியனுக்கு 28 ஓட்டுகளும், சந்தோஷத்துக்கு 21 ஓட்டுகளும் கிடைத்த செய்தி ஏற்கனவே வெளிவந்துள்ளது; தேர்தல் முடிந்தபின் நடந்த ஒரு நிகழ்ச்சி பற்றி சென்னை 'நவ இந்தியா' தரும் செய்தி அடியில் தரப்பட்டுள்ளது :—

"தேர்தல் அறிவிக்கப்பட்டதும் வெளியே கூடிநின்ற கூட்டத்தில் பரபரப்பு ஏற்பட்டது; 'இலஞ்சப் பேய் ஒழிக' என்று கோஷம் கிளம்பியது.

"'டாக்டர் சந்தோஷம் வாழ்க' என்றும்கூட்டத்தினர் கோஷம் எழுப்பினர்கள்.

"இந்த ஆர்ப்பாட்டத்தினர் எழுப்பிய கோஷத்தைக் கேட்டு, திரு. ராஜாராம் வெளியே வந்து கூட்டத்தினரை சமாதானப்படுத்திக் கலைந்து செல்லுமாறு கேட்டுக் கொண்டார். ஆர்ப்பாட்டக்காரர்கள் சிலர், டாக்டர் சந்தோஷத்திற்குப் போடுவதற்காகக் கொண்டுவந்த ரோஜா மாலைகளை சட்டசபை காங்கிரஸ் கட்சி அலுவலகத்தினுள் வைக்கப்பட்டிருக்கும் காந்தி சிலைக்கு அணிவித்துச் சென்றனர்."

## சொற்பயிற்சிக் கூட்டம்

1—12—57 காலை 9 மணிக்கு சென்னை—வண்ணையம்பதி நாராயண நாய்க்கன் தோட்டம், 7வது சந்திலுள்ள இளங்கோ கலை மன்றத்தில், தோழர் இரா. அரங்கநாதன் தலைமையில், 'உலகத்தில் நாம்' என்ற பொருள் பற்றிப் பலர் பேசுவர்.

## நாஞ்சில் மாவட்ட தி. மு. கழக மாநாடு

### தொண்டர் படைத் தலைவர்கள் வேண்டுகோள்

"நாஞ்சில் மாவட்ட தி. மு. கழக 2-வது மாநாடு, நாகர் கோவிலில், கலைவாணர் பந்தலில், டிசம்பர் 27, 28 ஆகிய தேதிகளில் நடத்த முடிவு செய்திருப்பதால், தொண்டர் படையில் சேர்ந்து பணியாற்ற விரும்பும் தோழர்கள் அந்தந்த கிளைக் கழகச் செயலாளரின் கை ஒப்புதலுடன் கீழே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு, டிசம்பர் 15-ந் தேதிக்கு முன்னதாக விண்ணப்பிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்"

என, தொண்டர் படைத் தலைவர்களான எஸ். வி. அப்பன், பி. எம். ஷா ஆகியோர் தெரிவிக்கின்றனர்.

முகவரி :—

எஸ். வி. அப்பன்,
தொண்டர்படைத் தலைவர்,
தி. மு. கழகம், பள்ளியாடி
கன்னியாகுமரி மாவட்டம்.

## சேலம் மாவட்ட தி.மு.க. 3-வது மாநாடு

### வரவேற்புக்குழுக்கூட்டம்

"5—12—57 பகல் 1 மணிக்கு, வேலூரில் (சேலம்) மேற்படி கூட்டம் நடைபெறும்; அவ்வமயம் ஆய்வுக்கு வருபவை :—

1. மாநாட்டுத் தேதி நிர்ணயித்தல் ;
2. மாநாட்டுத் தலைவர், திறப்பாளர் முதலியோரைத் தேர்ந்தெடுத்தல் ;
3. மாநாட்டு நிர்வாகிகள் தேர்வு;
4. மாநாட்டுச் செயற் குழுத் தேர்வு ;
5. செயலாளரால் கொண்டுவரப்படும் இதர தீர்மானங்கள்."

வரவேற்புக் குழு உறுப்பினர்கள் அனைவரும் தவருமல் வருகை தரவேண்டுமென சேலம் மாவட்டத் துணைச் செயலாளர் தோழர் பி. இராமலிங்கம் கேட்டுக்கொள்கிருர்.

## வேலூரில் சிறப்புக்கூட்டம்

**அண்ணு** கலந்துகொள்கிருர்

8—12—57 காலை 9 மணிக்கு, வேலூர் (வ. ஆ.) தோட்டப்பாளையம் தி. மு. கழகக் கட்டிட நிதிக்காக வேலூர் நேஷனல் தியேட்டரில், தோழர் எம். பி. சாரதி எம்.எல்.ஏ. தலைமையில் ஓர் சிறப்புக் கூட்டம் நடைபெறும்.

**அண்ணு** அவர்களும், தோழர்கள் ப. உ. சண்முகம் எம்.எல்.ஏ., வி. பி. இராமன் ஆகியோரும் சொற்பொழிவாற்றுவர்.

## கே. வி. கே. சாமி நினைவு மன்றத் துவக்க விழா

1—12—57 மாலை 6 மணிக்கு கோவை மாவட்டம் பல்லடத்தில் மேற்படி மன்றத் துவக்க விழா தோழர் அ நல்லரசு தலைமையில் நடைபெறும்; துணைப் பொதுச் செயலாளர் என். வி. நடராசன், தோழர்கள் பொ. இராமசாமி, க. நாச்சிமுத்து ஆகியோர் பேசுவர்.

## சென்னை—31-வது வட்ட வாசிகளுக்கு :

1—12—57 காலை 8 மணியளவில் சென்னை 31-வது வட்ட வள்ளுவர் மன்றச் சார்பில், பல வட்ட நகரசபை உறுப்பினர்களின் முன்னிலையில் ஓர் சுகாதார ஊர்வலம் நடைபெறவிருப்பதால் மேற்படி வட்டத்திலுள்ள மற்ற மன்றங்களும், பொதுமக்களும் கலந்துகொள்ளும்படி வள்ளுவர் மன்றச் செயலாளர் கேட்டுக்கொள்கிருர்.

## மதுரை நகர தி. மு. க. ஊழியர் கூட்டம்

1—12—57 இரவு 8-மணிக்கு மதுரை நகர தி. மு. கழக ஊழியர்கள் கூட்டம் மாவட்டக் கழக அலுவலகத்தில் (66, மேலக்கோபுரத் தெரு) நடைபெறும். மதுரை நகர தி. மு. க. உறுப்பினர்களனைவரும் கலந்து கொள்ளுமாறு மாவட்டச் செயலாளர் எஸ். முத்து கேட்டுக் கொள்கிருர்.

## கழகக் கூட்டம்

சேலம்— பொன்னம்மாப்பேட்டை இரயில்வேகேட் அருகில்
1—12—57 மாலை 6 மணிக்கு
தலைவர் : ஜி. சுக்கூர்
பேசுவோர் :
இளமுருகு
பொற்செல்வி
ஈ. ஆர். கிருஷ்ணன்
கே. ஆர். மாசிலாமணி
கே. எஸ். மணி

## திருப்பூரில் 'கலப்புமணம்'-நாடகம்

1—12—57 இரவு 9 மணிக்கு திருப்பூர் அங்கேரிபாளையம் கலையரங்கில், இளங்கோ நாடக மன்றத்தாரால், 'கலப்பு மணம்' என்னும் நாடகம் நடத்தப்பெறும். தோழர் முத்துரத்தினம் தலைமை வகிப்பார். தோழர் எஸ். ஆர். சுப்பிரமணியம் கலைவாணர் என். எஸ். கே. படத்தைத் திறந்து வைப்பார்.

## சென்னை 48-வது வட்ட தி. மு. க. உறுப்பினர்களுக்கு :

2—12—57 இரவு 7 மணிக்கு சென்னை—சைதை, சடையப்ப முதலித் தெரு, எண் 2, இல்லத்தில் கழகப் பொது உறுப்பினர்கள் கூட்டம் நடைபெறும்.

## அரசியல் வகுப்பு

1—12—57 இரவு 7 மணிக்கு சென்னை 48-வது வட்ட தி.மு.க. கிளை சார்பில், சைதை விசாகத் தோட்டம் சொர்ணும்பிகை கம்பெனியில் தோழர் அ. ச. நடராசன் அவர்களால் அரசியல் வகுப்பு நடத்தப்பெறும்.

## சென்னை மாநில பஞ்சாயத்து யூனியன் மாநாடு

டிசம்பர் 1, 2 ஆகிய தேதிகளில் சென்னை மவுண்ட்ரோடு இராஜாஜி மண்டபத்தில், சென்னை மாநில பஞ்சாயத்து யூனியன் 5-வது மாநாடு சென்னை மேயர் கே. என். சீனிவாசன் தலைமையில் நடைபெறும்.

## சேலம் மாவட்டத்தில் 318 தி. க. தோழர்கள் கைது

### காவலில் வைக்கப்பட்டனர்

சேலம், நவ. 27—

திராவிடர் கழகம் நடத்திய சட்டப் புத்தக எரிப்புப் போராட்டத்தில் சேலம் நகரம் உள்பட சேலம் மாவட்டத்தில் மொத்தம் 318 பேர் போலீசாரால் கைது செய்யப்பட்டனர்.

சேலம் நகரில் கைது செய்யப்பட்ட 54 பேர்களையும் 15 நாட்களுக்கு 'சப் ஜெயிலில்' காவலில் வைக்குமாறு இரண்டாவது அடிஷனல் முதல் வகுப்பு மாஜிஸ்திரேட் உத்தரவிட்டார். அவர்கள் மீது இன்னும் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்படவில்லை.

6 பேர்களை டிசம்பர் 3-ந் தேதி வரையிலும், 18 பேர்களை டிசம்பர் 4-ந் தேதி வரையிலும் காவலில் வைக்குமாறு மாவட்ட மாஜிஸ்திரேட் உத்தரவிட்டார். (ச. நி)

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

